# பொம்மை பழய பொம்மை


1. பொம்மை பழய பொம்மை
2. பொம்மை
3. எகிப்தியப் பண்பாட்டில்
4. கிரேக்கப் பண்பாட்டில்
5. ரோமானியப் பண்பாட்டில்
6. சிந்து நதிப் பண்பாட்டில்
7. மௌரியப் பண்பாட்டில்
8. காந்தாரப் பண்பாட்டில்
9. தமிழர் பண்பாட்டில்
    1. FREETAMILEBOOKS.COM
    2. கணியம் அறக்கட்டளை
    3. நன்கொடை

This book was produced using pandoc

பதிவிறக்கம் செய்ய - http://FreeTamilEbooks.com/ebooks/bommai_pazhaya_bommai

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

மெய்ப்புப் பார்ப்பு : விக்கிமூல பங்களிப்பார்கள்

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

Ebook Publisher: http://freetamilebooks.com
Proof Reader : Wikisource Constributors
Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com
Ebook Creation: Iswarya Lenin - aishushanmugam09@gmail.com
Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

This Book was produced using LaTeX + Pandoc

# பொம்மை

உருட்டு சட்டி பொம்மையிது
உருண்டு உருண்டு ஆடுமிது
தஞ்சாவூர் ரயிலிடியில்
தம்பி பாப்பா அழுதபோது
சின்ன அத்தான் வாங்கி தந்த
சீரான பொம்மையிது

# எகிப்தியப் பண்பாட்டில்

குழந்தைகளுக்கு பொம்மை என்றால் ரொம்பவும் பிடிக்கும். பொம்மைகளை வைத்துக்கொண்டு விளையாடுவது என்றால் அவர்களுக்கு எவ்வளவு ஆசை தெரியுமா ? மண்ணாலான பொம்மை, மரத்தாலான பொம்மை, வெண்கலம் போன்ற உலோகங்களாலான பொம்மை, தந்தத்தாலான பொம்மை என்று பொம்மைகளில் பலாவகை உண்டு. விளையாட்டு பொம்மைகள் ஒருவகை. நவராத்திரிக் கொலுவில் வைக்கிறோமே அவைகள் அழகு பொம்மைகள். கோயில்களில் கடவுளைச் சிலர் வேண்டிக்கொள்வார்கள். அதற்காக வைக்கும் பொம்மைகள் ஒருவகை.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தவர்கள் என்ன பொம்மைகள் செய்தார்கள் ? அக்காலத்தில் நம் நாட்டில் என்ன பொம்மைகள் இருந்தன ? மற்ற நாடுகளில் என்ன பொம்மைகள் இருந்தன ? இவைகளைப்பற்றி தெரிந்துகொள்ள ஆவலாயிருப்பீர்கள் அல்லவா ? அவற்றைப் பற்றி இப்போது கவனிப்போம்.

நைல் என்ற நதி எகிப்து நாட்டின் ஜீவ நதியாகும். இதில் தண்ணீர் எப்போதும் ஓடிக்கொண்டிருக்கும். இதன் இருகரைகளிலும்தான் நகரங்களும், கிராமங்களும் இருக்கின்றன. அதனால் எகிப்திய மக்கள் நைல் நதிக்கரையிலேயே வசிக்கின்றனர். நதிக்கரையைத் தாண்டி உள்ளே செல்ல வெறும் பாலைவனம்தான். இந்நாடு உலகிலேயே பழமையான சரித்திரம் உடையது. பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்னதாகவே இந்நாட்டில் பண்பாடு உள்ள மக்கள் வாழ்ந்து வந்தார்கள். இவர்களுடைய பல பொருள்களைப் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்து இருக்கிறார்கள். இவற்றில் பலவிதமான பொம்மைகள் இருக்கின்றன. களிமண் பொம்மைகள், தாவரப்பசையினாலான பொம்மைகள், தந்தப் பொம்மைகள் முதலிய பொம்மைகள் இவற்றில் இருக்கின்றன.

எகிப்து மக்கள் குச்சியை எடுத்துக்கொள்வார்காள். அதில் தாவரப் பசையைப் பூசுவார்கள். அதன் மேலாகக் களிமண்ணைப் பூசி, மனிதன், குரங்கு, குழந்தை முதலிய பொம்மைகள் செய்வார்கள். இவ்விதம் செய்த பொம்மைகள் பல கிடைத்துள்ளன. பல மிருகங்களின் பொம்மைகள்கூட இப்படி செய்திருக்கிறார்கள். மிருகங்களில் நாய், நரி, சிங்கம், மாடு, யானை, முள்ளம்பன்றி முதலிய பொம்மைகள் இருக்கின்றன. இதிலிருந்து அக்காலத்தில் இந்த மிருகங்கள் எல்லாம் இருந்தன என்று தெரிகிறதல்லவா ?

அது மட்டுமா ? நைல் நதியில் விசித்திரமான ஆமைகள் இருக்கின்றன. இந்த ஆமைப் பொம்மையும் நிரம்ப செய்தார்கள். இப்பொம்மைகள் எவ்வளவு அழகானவை தெரியமா ? வண்ண வண்ண பொம்மைகள். சிவப்பு வண்ணம், பச்சை வண்ணம் முதலிய வண்ணங்களைப் பூசி பொம்மைகளை அழகாகச் செய்தார்கள். பெண்கள் தலையில் ஊசிக்குத்திக் கொள்வார்களே, அதில்கூட அழகான பொம்மைகள் இருக்கும்.

ஐயாயிரம் வருஷங்களுக்கு முந்திய பொம்மைகள் கிடைத்திருக்கின்றன. இவற்றில் எழுத்துக்கள் இருக்கின்றன. இதிலிருந்து இப்பொம்மைகள் எந்தக் காலத்தில் செய்யப்பட்டவை என்று சொல்லலாம். இதைச் *சரித்திர காலம்* என்று சொல்லுவார்கள். எகிப்து நாட்டைப் *பரோக்* என்பவர்கள் ஆண்டுவந்தார்கள். *பரோக்* என்றால் எகிப்து நாட்டின் மன்னர் என்று அர்த்தம். இவர்களில் மூன்றாம் தூத்மொஸில், இரண்டாம் ராம்சே என்பவர்கள் மிகச் சிறந்தவர்கள். இவர்கள் காலத்தில் செய்த பொம்மைகள் கிடைத்திருக்கின்றன. இவைகள் நல்ல நிலையில் இன்னும் இருக்கின்றன. இவ்வளவு வருஷங்களுக்குப் பிறகுகூட எப்படி இந்த பொம்மைகள் நன்னறாக இருக்கின்றன தெரியுமா ? அதற்கு இந்நாட்டு மன்னர்கள் அனுசரித்து வந்த ஒரு வழக்கமே காரணமாகும். எகிப்திய மக்களிடத்தில் மிக முக்கியமான ஒரு நம்பிக்கை இருந்தது. அதாவது ஒருவர் இறந்துபோனால்

அவருடைய ஆத்மா இறப்பதில்லை. அது இருந்த உடலை பாதுகாத்துவைத்தால் என்றைக்காவது ஒருநாள் திரும்பி வந்துவிடும் என்று எண்ணி இருந்தனர். நம் நாட்டிலும் இறந்தவர்களின் உடலை சிலர் எரித்துவிடுகின்றனர். சிலர் புதைத்துவிடுகின்றனர். பிற நாடுகளிலும் இவ்விதம் புதைத்து விடுகின்றனர்.

எகிப்திய நாட்டில் அக்காலத்தில் இறந்தவர்களின் உடலை எரித்துவிடாமல் பாதுகாத்தனர். தைலங்களாலும், வாசனைத் திரவியங்களாலும், தோல் கெட்டு விடாமல் செய்வார்கள். பின்னர் உடலை பட்டு வஸ்திரத்தால் கட்டி வைப்பார்கள். முகத்தை தங்கம் வெள்ளி முதலியவற்றாலான முகமூடிகளால் அழகுபடுத்துவார்கள். இவைகளை *மம்மி* என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். பின்னர் இதற்காக கட்டப்பட்ட கல்லறைகளில் வைத்துப் புதைத்துவிடுவார்கள். அதில் யாரும் நுழையாதபடி வழியை மூடிவிடுவார்கள். இவ்விதம் புதைக்கும்போது இறந்தவர்களுக்கு பிடித்தமான பொருள்கள், பொம்மைகள் முதலியனவைகளையும் அங்கு புதைத்துவிடுவார்கள்.

அந்நாட்டு மன்னர்களாகிய *பரோக்*கள் தாங்கள் பட்டத்திற்கு வந்தவுடன் தங்கள் உடலை புதைப்பதற்கு மிகப்பெரிய கட்டிடங்களைக் கட்டுனார்கள். இவைகளுக்கு *பிரமிட்* என்று பெயர்.

இவைகள் உலகிலேயே மிகப்புகழ்வாந்தவை. மிகவும் பெரிய கட்டிடங்கள்.

இப் பிரமிடுகளின் உள்ளை மன்னரின் உடலை மிக விலை உயர்ந்த தங்கம், வைரம் முதலியவற்றால் ஆன பொருள்களுடன் வைத்துவிடுவார்கள். பின்னர் இதன் வழியையும் மறைத்துவிடுவார்கள். யாரும் உள்ளே நுழையாதபடி இவைகளின் வழிகள் மறைந்து போய்விடும். இருந்தாலும் இவற்றில் மிக வலையுயர்ந்த பொருள்கள் இருந்ததால் அக்காலத்திலேயே திருடர்கள், தந்திரமாக உள்ளை நுழைந்து அழகான பொருள்களையெல்லாம் திருடிச்சென்றுவிட்டார்கள். இவை போக பல எஞ்சியுள்ளன. தற்காலத்தில் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் மிகுந்த சிரமத்துடன் பிரமிடுகளைத் திறந்து உள்ளே போய்ப் பல பொருள்களைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இவற்றில் பல பொம்மைகள் மிகவும் நல்ல முறையில் உள்ளன. அநேகமாக எல்லா பிரமிடுகளிலும் ஒரு சிறிய கப்பலின் பொம்மை வைக்கப்பட்டிருக்கும். இது எதற்குத் தெரியுமா ? இறந்துபோன மன்னர் இந்தக் கப்பலில் ஏறி கடலை தாண்டித் திரும்பி வந்துவிடுவார் என்ற அக்காலத்திய மக்கள் நம்பினார்கள்.

எகிப்திய நாட்டின் மிகப் புகழ்வாந்த கடவுள் *ஆமூன்* என்பவர். இவர் செம்மறியாட்டின் உருவத்திலிருப்பவர். இவரது சிறிய

பொம்மைகளும் பிரமிடுகளில் உள்ளன. ஓர் உழவன் இரண்டு காளைகள் பூட்டி ஏரை ஓட்டிசெல்வது போன்ற ஒரு சிறிய பொம்மை கிடைத்துள்ளது. இது மிக அழகு வாய்ந்தது. உட்கார்ந்திருக்கும் நிலையில் ஒரு நாய், கழுகுத் தலையும் மனித உருவமும் கொண்ட பொம்மை முதலிய பொம்மைகள் கிடைத்துள்ளன. மம்மிகளின் முகமூடிகள் மிகவும் நேர்த்தியானவை. ஒரு பிரமிட்டில் சிறு குழந்தையின் மம்மி கிடைத்துள்ளது. ஒரு பூனையின் மம்மிகூட கிடைத்திருக்கிறது. அதன் அருகில் அழகான விளையாட்டு பொம்மைகள் வைக்கப்பட்டு இருந்தன. இவ்விதம் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவர்கள் உபயோகித்த பொம்மைகள் கிடைப்பது அரிது. எனெனில் அவர்கள் வாழ்ந்த இடங்கள் மண்மேடிட்டு மறைந்து போயிருக்கலாம். நதிகரையில் உள்ள நகரங்களும் வீடுகளும் வெள்ளத்தில் மூழ்கியிருக்கலாம். அவ்விதம் கிடைத்தாலும் இது எக்காலத்தது என்று அறிவது கஷ்டம். ஆனால் எகிப்திய நாட்டில் பிரமிடுகளின் உள்ளே நன்கு பாதுகாத்து வைக்கப்பட்டுள்ள இப்பொம்மைகள் யாரால் வைக்கப்பட்டன, அவை எக்காலத்தவை என்று அவற்றில் உள்ள எழுத்துக்களினால் கூற முடிகறது.

# கிரேக்கப் பண்பாட்டில்

இன்றைக்கு சுமார் 3000 ஆண்டுகளுக்கு முனபு கிரேக்க நாடு சிறந்த நாடாக விளங்கியது. கொஞ்சம் கொஞ்சமாக அது மிகவும் பலம் பெற்றது. அந்நாட்டு மக்கள் மிக அழகான பொம்மைகள் செய்வதில் சிறந்தவர்கள். முக்கியமாக அவர்கள் பொம்மைகள் பளிங்குக் கல்லாலும், வெண்கலத்தாலும், மண்ணாலும் அனவை. அவைகளைப்பற்றி தெரிந்து கொள்வதற்கு முன்னால் அவ்வூர் மக்களைப்பற்றித் தெறிந்து கொள்வோம்.

கிரேக்க நாட்டில் அரசரது ஆட்சி கிடையாது. ஒவ்வொரு நகரமும் தனி ராஜ்யமாக விளங்கியது. ஒவ்வொரு நகர மக்களும் தங்களைத் தாங்களே ஆண்டு கொண்டார்கள். மிகவும் முக்கியமான வேலைகளுக்குத் தங்களில் சிலரைத் தேர்ந்தெடுத்துக்கொண்டார்கள். நீதி வழங்குதல், பொதுக் கணக்குகள் பார்த்தல் முதலியவைகளைத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் கவனித்து வந்தனர்.

கிரேக்க நாட்டில் சிறு வயதிலேயே சிறுவர்களை படிக்க அனுப்பி விடுவார்கள். ஒவ்வொரு சிறுவனும் படிப்போடு தேகப்பயிற்சியும் செய்யவேண்டம். ஓட்டப் பந்தயமங்கள் எல்லாம் கற்றுக்கொள்ள

வேண்டம். குஸ்தி போட பயில வேண்டும். பெரியவனாக ஆகும்போது அவன் உடம்பு பார்பதற்கு அழகாக இருக்கவேண்டும். தான் நகரத்திற்கான சண்டை போடத் தயாராக இருக்க வேண்டும். தினமும் விளையாட்டுகள் இருந்ததால் சிறுவர்கள் உற்சாகமாக படித்தார்கள், விளையாடினார்கள். எல்லோரும் ஒழுங்காக நின்று கொண்டு, பாட்டுகள் பாடிக்கொண்டு, அதற்கொப்ப உடற்பயிற்சி செய்வார்கள். பாட்டுகளை வைத்து அதன் படி உடற்பயிற்சி செய்கிறோமே அதற்கு *மியூசிகல் டிரில்* என்று ஆங்கிலத்தில் பெயர். அதை முதன் முதலில் கண்டு பிடித்தவர்கள் கிரேக்க நாட்டுச் சிறுவர்கள்.

சிறுவர்களுக்கும் பெரியவர்கும் அநேக விளையாட்டுப் பந்தயங்கள் உண்டு. இவற்றில் எல்லாம் மிகச் சிறந்தது, ஒலிம்பியா என்ர இடத்தில், நான்கு வருடத்திற்கு ஒரு முறை நடைபெற்ற ஒரு பெரிய விளையாட்டுப் பந்தய விழாதான். அது 5 நாட்களுக்கு நடைபெறும். முதல் நாளன்று கடவுளை வணங்குவார்கள். மறுநாள் சிறுவர்க்கான போட்டிகள் நடைபெறும். கடைசிநாள் ஜெயித்தவர்களின் பெயர்களைக் கூப்பிடுவார்கள். அவர்களுக்கு மலர்மாலைகளை அணிவிப்பார்கள். அதுதான் அவர்களுக்குப் பரிசு. அந்தப் பரிசு பெற்றால் ஊர் மக்கள் முழுவதும் அவனைக் கொண்டாடுவர். பரிசுகள் கொடுக்கும் இந்த ஒலிம்பியா விளையாட்டுப் போட்டியைப் போலவே இப்போது உலக விளயாட்டுப் போட்டி ஒன்று நடக்கிறது.

அதுவும் நான்கு வருஷங்களுக்கு ஒரு முறைதான் நடக்கும். அதற்கு என்ன பெயர் தெரியுமா ? ஒலிம்பிக் விளையாட்டு போட்டி.

*எதினா* என்ற கடவுளைக் கிரேக்க நாட்டு மக்கள் வழிபட்டனர். அவள் பெயரால் ஏதன்ஸ் என்ற நகரம் விளங்கியது. அதுதான் கிரேக்கத் தலைநகரம். அங்கு மலைமேல் எதினாக் கடவுளுக்கு ஒரு கோயில் கட்டினார்கள். *பெரிக்லஸ்* என்ற பெரிய வீரன் அந்தக் கோயிலைக் கட்டினான். அது கட்டி 2400 வருஷங்கள் ஆகிவிட்டன. இன்னும் அந்தக கோயில் ஏதன்ஸ் நகரத்தில் இருக்கிறது. இந்தக் கோயிலை அழகான சிற்பங்கள் அலங்கரித்தன. இந்தக் கோயிலின் அழகைப் பார்த்து உலகமே ஆச்சரியப்படுகிறது. *எதினா* தெய்வத்தை மரத்தால் செதுக்கினார்கள். தங்க தகட்டால் போர்த்தினார்கள். வருஷா வருஷம் ஒரு விழா கொண்டாடினார்கள். ஒரு பெரிய கப்பல் செய்வார்கள் அதில் அந்தத் தெய்வாத்துக்கு ஆடை அணிகள் வைப்பார்கள். அந்தக் கப்பலை நாலு சக்கரங்களின் மேல் வைத்து இழுத்துக்கொண்டு கோயிலுக்குப் போவார்கள். இதைப் பின் தொடர்ந்து பெண்களும், வீரர்களும் குதிரை வீரர்களும் செல்வார்கள் அது கண்கொள்ளக் காட்சியாக இருக்குமாம். அதைச் சிற்பங்களில் செதுக்கியிருக்கிறார்கள்.

குழந்தைகளுக்குச் சின்னச் சின்னப் பொம்மைத் தேர்களும், வண்டிகளும் செய்து கொடுப்பார்கள். வேறுவகைப் பொம்மைகளும்

செய்வார்கள். ஒரு மனித உருவம். கை, கால் எல்லாம் தனித்தனியாகச் செய்வார்கள். ஆணிகள் வைத்து சேர்த்து வடுவார்கள். அந்தப் பொம்மையின் கை, கால் எல்லாவற்றையும் தனித்தனியாக ஆட்டலாம். வேடிக்கையாக இருக்கும். நிறையப் பொம்மை அச்சுக்கள் செய்து அவற்றிலிருந்து பொம்மைகள் செய்தார்கள். உடம்பையெல்லாம் ஒரே அச்சிலிருந்து செய்வார்கள். தலைகளை மட்டும் வெவ்வேறு அச்சிலிருந்து செய்வார்கள். பிறகு இரண்டையும் பொருத்துவார்கள். இவைகளைப் பார்த்தால் ஒரே மாதிரியாகவும் இருக்கும். வெவ்வேறு மாதிரியாகவும் இருக்கும். இந்த பொம்மைகளை மண்ணால் செய்து சுட்டு விடுவார்கள். பிறகு அழகிய வண்ணங்கள் பூசுவார்கள். இந்த பொம்மைகள் ரொம்ப அழகானவை. சுமார் ஆயிரக்கணக்கான பொம்மைகள் பூமிக்கடியிலிருந்து கிடைத்திருக்கிறது.

கிரேக்கர்கள் பளிங்குக் கல்லினால் சிற்பம் செதுக்குவதிலும், வெண்கலத்தால் பொம்மைகள் செய்வதிலும் ரொம்பவும் சமர்தார்கள். எல்லாவற்றையும்விட அவர்களின் மண் பாண்டங்கள் மிகவும் சிறந்தவை. ஒவ்வொரு மண்பாண்டத்தின் மேலும் அழகான ஓவியங்கள், கறுப்பிலும் சிவப்பிலும் தீட்டப்பட்டு இருக்கும். குயவன் மண் பாண்டங்கள் செய்து ஓவியனிடம் கொடுத்து விடுவான். அவன் கிரேக்க கடவுள்கள், வீரர்கள் இவர்களின் படத்தைத் தீட்டுவான். பிறகு இப்பானையை நெருப்பில் போட்டு சுட்டு விடுவார்கள். அந்த

ஓவியம் அழியவே அழியாது. இந்த மாதிரி அழியாத ஓவியங்களைப் பானைகள்மேல் எப்படி தீட்டுவது இப்போது யாருக்கும் தெரியாது. பல அழகான மண்பாண்டங்களை இவர்கள் செய்தார்கள்.

ஹோமர் என்பவர் ஒரு கிரேக்க கவி. அவர் குருடர். அவர் அற்புதமான இரண்டு காவியங்கள் எழுதியிருக்கிறார். *இலியாட்*, *ஒடிஸ்ஸி* என்பன அவைகளின் பெயர். அவை நம்நாட்டில் இராமாயணம், மகாபாரதம் எப்படியோ, அப்படிப் படிக்கப்பட்டு வருகிறது.

இந்த கிரேக்க வம்சத்தில் வந்தவன்தான் மாவீரன் அலெக்ஸாண்டர். சுமார் ஆயிரம் வருஷங்கள் சிறந்து விளங்கிய கிரேக்க நாடு கறிஸ்துவுக்கு 100 அண்டுகளுக்கு முன்னர் வலுவிழந்து போயிற்று.

# ரோமானியப் பண்பாட்டில்

ரோமுலஸ், ரேமஸ் என்பவர்கள் மார்ஸ் என்ற கடவுளுடைய இரட்டைக் குழந்தைகள். பிறந்தவுடன் அவர்களை ஒரு கூடையில் வைத்து டைபர் என்ற நதியில் விட்டுவிட்டார்கள். அந்த கூடை ஓடி ஒரு கரையை அடைந்தது. அந்தக் குழந்தைகளை ஒர் ஓநாய் எடுத்து பால் கொடுத்து வளர்த்தது. அவர்கள் பெரியவர்களானவுடன் ஒரு புது நகரத்தை ஏற்படுத்த விரும்பினார்கள். அவர்களில் ரோமுலஸ் ஏற்படுத்திய நகரத்திற்கு ரோம் என்று பெயர்.

இங்கு வாழ்ந்த ஜனங்களுக்கு ரோமானியர் என்று பெயர். ரோம் நகரம் இத்தாலிய நாட்டின் ஒரு பகுதியில் உள்ளது. கிறிஸ்து பிறப்பதாற்கு ஓராயிரம் ஆண்டுகளுக்கும் முன்னரே இங்கு மக்கள் வாழ்ந்து வந்தனர். ஆனால் கிறிஸ்து பிறந்த காலத்தில்தான் இன்றைக்கு சுமார் 2000 வருடங்களுக்கு முன்னர் ரோமானியர் மிகச் சிறந்தவர்களாக வாழ்ந்துவந்தனர். அந்த ரோமானிய நாட்டில் என்ன பொம்மைகள் இருந்தன என்பதைப்பற்றிப் பார்ப்போம்.

அவர்களுடைய பொம்மைகளைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு முன் அவர்கள் எப்படி வாழ்ந்தார்கள் என்று தெரிந்து கொள்ள

வேண்டுமல்லவா? ரோமுலஸ் சுமார் 2700 ஆண்டுகளுக்கு முன்னால் ரோமானிய நாட்டை ஏற்படுத்தினார். கொஞ்ச காலம் ரோம் நாட்டை அரசர்கள் ஆண்டார்கள். அதன்பின் ரோமானியர் நாட்டில் முடியரசு கிடையாது. அதாவது அவர்களை அரசர்கள் ஆளவில்லை. இப்போது நம் நாட்டில் குடியரசு இருப்பதுபோல், அங்கு அப்போதே குடியரசு இருந்தது. மக்களில் சிலரைத் தேர்ந்தெடுத்து அவர்கள் மூலம் ஆட்சியை நடத்தினர். ஜூலியஸ் சீசர் என்று கேள்விப்பட்டிருப்பீர்கள் அல்லவா? அவரும் அகஸடஸ் என்பவரும் இவ்விதம் ஆண்ட தலைவர்களில் முக்கியமானவர்கள். இதற்குப்பிறகு ரோமானியர் நாடு ஒரு பேரரசாக மாறியது. அப்போது அதை பேரரசர்கள் ஆண்டார்கள்.

ரோமானியர்கள் சிறந்த வீரர்கள். சிறந்த கட்டுபாடான படைகளை உடையவர்கள். படைத்தலைவனுடைய சொல்லைத் துளியும் தட்டாதவர்கள். உலகத்திலேயே பெரிய சாம்ராஜ்யமாக ரோமானிய நாடு விளங்கியது. தங்கள் மக்களுக்கு வீரத்தை விளைவிக்க இவர்கள் விசித்திரமான விளையாட்டு ஒன்று ஆடினார்கள். வட்டமான ஒரு விளையாட்டு மைதானம். அதில் மக்கள் பார்ப்பதற்கு நிரம்ப இடங்கள் இருக்கும். அதன் மத்தியில் விளையாட்டு இடம். இடற்கடியில் பல அறைகள் இருக்கும். குகை மாதிரி இருக்கும். அந்த அறைகளில் சிங்கம், புலி, கரடி, ஓநாய் முதலிய காட்டு மிருகங்கள் இருக்கும்.

விளையாடுகிற இடத்தில் விளையாட்டு வீரர்கள் இருப்பார்கள். அவர்கள் மேல் இந்த மிருகங்களை அவிழ்த்து விடுவார்கள். அப்போது அவ்வீரர்கள் அந்த மிருகங்களுடன் சண்டை போடுவார்கள். சில சமயம் மிருகங்களை அவர்கள் கொன்று விடுவார்கள். சில சமயம் மிருகங்கள் அவர்களை கொன்றுவிடும். எவ்வளவு கொடுமையான விளையாட்டு இதை மக்கள் வேடிக்கை பார்த்து சிரிப்பார்களாம். இது மக்கள் மனத்தில் வீர உணர்ச்சியை உண்டாக்குமாம். ரோமானியப் படைகள் எங்கெல்லாம் தங்கியதோ அங்கெல்லாம் இந்த மைதானத்தை ஏற்படுத்தினார்கள். எல்லா மைதானாத்திலும் மிகவும் பெரியது ரோம் நகரில் இருக்கிறது. அடே அப்பா ! எவ்வளவு பிரும்மாண்டமான மைதானம் தெரியுமா? அது கட்டி முடிந்து சுமார் 2000 வருஷமாகிறது. இன்னும் அது நிற்கிறது. அதைப் பார்த்தால் மிகவும் ஆச்சரியமாக இருக்கும்.

ஆனால் இது மிகவும் கொடுமையான விளையாட்டு. மனிதர்களும் மிருகங்களும் ஒருவரையொருவர் கொல்லுவது; மக்கள் அதை வேடிக்கப் பார்ப்பது மிகவும் தவறு என்று ஒரு முனிவர் அந்த விளையாட்டு நடந்துகொண்டிருந்த மைதானத்துக்கு போனார். “இது தப்பு இப்படி விளையாடாதீர்கள்” என்று கூறினார். விளையாட்டை இவர் கெடுக்கிறார் என்று இவரைக் கல்லாலேயே அடித்து எல்லோரும் கொன்று விட்டார்கள். அவர் இறந்துபோய்விட்டார். ஆனாலும் அன்றிலிருந்து இந்த விளையாட்டே நின்றுவிட்டது.

ரோமானியர்கள் “மித்திரன்” என்ற கடவுளை வணங்கினார்கள். அவருக்குக் கோயில் எழுப்பினார்கள். நம் நாட்டிலும் “மித்திரன்” என்ற கடவுளை வணங்குகிறோம். மித்திரன் என்பது சூரியன். என்ன ஒற்றுமை பார்த்தீர்களா? ரோமானியர்கள் ஒருவகை மண் பாண்டங்களைச் செய்வதிலும் கெட்டிக்காரர்கள். அந்த மண் பானைகள் செய்யத் தனி அச்சு வைத்திருப்பார்கள். அதில் களிமண்ணை வைத்து பானைகள் செய்வார்கள். அந்தப் பானைகளின் வெளிப்புறமெல்லாம் அழகு அழகான பொம்மைகள் அந்த அச்சிலிருந்து விழுந்திருக்கும். அந்த மண்பாண்டங்கள் எல்லாம் செக்கச் செவேலென்று இருக்கும். பளபளவென்று கண்ணாடி போல இருக்கும். அந்த மண்பாண்டகளை உலகத்தில் பல தேசங்கள் விரும்பின. பல நாடுகளுக்கு அந்த மண்பாண்டங்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. ரோம் நகரில்தான் கத்தோலிக்கக் கிறிஸ்தவர்களின் மதகுருவான போப்பாண்டவர் இருக்கிறார். இவருடைய இடத்தில் செயினட் பீட்டர்ஸ் சர்ச் ஒன்று இருக்கிறது. அதில் உலகப் பிரசித்த வாய்ந்த ஓவியங்கள் இருக்கின்றன. “மைக்கேல் ஆன்செலோ”, “ரபேல்” என்ற புகழ்வாய்ந்த ஓவியர்கள் சித்திரம் வரைந்திருக்கிறார்கள். ஏசு கிறஸ்துவின் சரித்திரத்தை இவை விளக்குகின்றன. மிகவும் அழகான ஓவியங்கள்.

ரோமானரியர் நாட்டில் களிமண்ணில் ஆன பொம்மைகள் கிடைக்கின்றன. களி மண்ணால் பொம்மைகள் செய்வதில்

ரோமானியர் மிகச் சிறந்தவர்கள். இவர்கள் பொம்மைகளுக்குகென்று விழா ஒன்று வருடா வருடம் கொண்டாடுவார்கள். நாம் நவராத்திரி விழா கொண்டாடுகிறோம் அல்லவா? அது போல, ஒருவருக்கொருவர் இவ்விழாவில் பொம்மைகளைப் பரிசாக அளித்துக் கொள்வார்கள். இவ்விழாவில் அதிகமாக பொம்மைகளை வாங்கி சிறு குழந்தைகளுக்கு விளையாடக் கொடுப்பார்கள். சிறுவர்கள் தங்கள் ஆசிரியர்களுக்கு பொம்மைகளை வணக்கத்துடன் அளிப்பார்கள். நம் சிறுவர்கள் அட்டையில் சிங்கம், புலி, பூதம் எல்லாம் எழுதி முகமூடியாக அணிந்துகொண்டு விளையாடுகிறார்கள் அல்லவா? அதேபோல ரோமானியர் நாட்டில் களிமண்ணால் செய்த முகமூடிகள் இருந்தன.

சர்க்கஸ் அல்லது நாடகம் பார்க்கப்போனால் நாம் டிக்கட் வாங்குகிறோமல்லவா? அதேபோல ரோமானியர் நாட்டிலும் சர்க்கஸ் பார்க்கப் போனால் டிக்கட் உண்டு. ஆனால் அந்த டிக்கட், களிமண்ணால் செய்யப்பட்டது. யானை சர்க்கஸ் பார்க்கப் போனால் யானை பொம்மை டிக்கட்டில் செய்யப்பட்டிருக்கும். குதிரைச் சர்க்கஸில் குதிரைப் பொம்மையிருக்கும். மண்ணாலான உண்டியலை நாம் பார்த்திருக்கிறோம். அதுபோல் கூடாராம் போன்ற உண்டியல்களை ரோமானியச் சிறுவர்கள் வைத்திருந்தனர். அவர்களுடைய விளக்குகளில் பல பொம்மைகள் இருந்தன.

ரோமானியர்கள் ரொம்ப நாட்களுக்குச் சுடாத செங்கல்களைக் கொண்டு வீடு கட்டி வசித்தனர். பின்னர்தான் சுட்ட கற்களைக் கொண்டு வீடு கட்டினர். இந்த சுட்ட செங்கல்களிலும், ஓடுகளிலும் பலவிதமான பொம்மைகளை அவர்கள் பொறித்தனர்.

ரோமானியர் வாழ்ந்த காலத்துக்கு சுமார் 800 வருஷத்துக்கு முன்னால், பக்கத்து நாடாகிய கிரேக்க நாட்டில் வாழ்ந்தவர்கள் மிகவும் சமர்தர்கள். நாட்டை ஆள்வதிலும் பொம்மைகளைச் செய்வதிலும் சிறந்தவர்கள் என்று பார்த்தோம் அல்லவா? கிரேகர்களின் பொம்மைகள் பளிங்குக் கல்லினால் செய்யப்பட்டிருந்தன. மற்ற கற்களாலும் செய்யப்பட்டிருந்தன. வெண்கலத்தாலும் நிரம்ப பொம்மைகள் செய்தார்கள். மண்ணாலும் பொம்மைகள் செய்தார்கள் என்று பார்த்தோமல்லவா? இவைகள் எல்லாம் ரொம்ப ரொம்ப அழகாக இருக்கும். அதனால் ரோமானியர்கள் கிரேக்கர்களின் பொம்மைகளை பார்த்து அதேபோலத் தங்கள் பொம்மைகளயும் செய்தார்கள். கிரேக்க நாடு கொஞ்சம் கொஞ்சமாக வலுவிழந்து போய்விட்டது. ரோமானியர்கள் மிகவும் பலம் பொருந்தியவர்கள். அதனால் கிரேக்க நாட்டிலிருந்து நல்ல நல்ல பொம்மைகளைத் தங்கள் நாட்டுக்குக் கொண்டு வந்துவிடுவார்கள். அவர்களது பொம்மைகளைப் பார்த்துக் “காப்பி” அடித்துவிடுவார்கள். மேலும் இந்த பொம்மையை யார் செய்தது, எதைப் பார்த்து செய்தது என்றெல்லாம் எழுதிவிடுவார்கள். இவ்விதம் செய்த பளிங்கு

பொம்மைகலும் வெண்கலப் பொம்மைகளும் ஏராளமாக இருக்கின்றன.

பெரிய பெரிய பொம்மைகளைக் கூட ரோமானியர்கள் களிமண்ணால் செய்தனர். அவர்களது பெட்டிகள்கூடக் களிமண்ணால் செய்யப்பட்டிருக்கும். நம் நாட்டில் இறந்தவர்களுடைய எலும்புகளை எடுத்து ஓர் பானையில் போட்டு அடக்கம் செய்வது பழையகால வழக்கங்களில் ஒன்று. அப்பானைகளுக்கு “முதுமக்கள் தாழி” என்று பெயர். அதுபோல் ரோமானியர் நாட்டிலும் பழக்கம் இருந்தது. ஆனால் அவர்கள் பானைகளுக்கு பதிலாக மண்ணாலான பெட்டிகளையும், பளிங்குக் கல்லாலான பெட்டிகளையும் உபயோகபடுத்தினர். அப்பெட்டிகளின் மேல் இறந்தவர்களின் பொம்மைகளைச் செய்துவைப்பார்கள்.

அந்த நாட்டில் உதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் தோண்டிப் பல பொம்மைகளை எடுத்திருக்கிறார்கள். ரோமலஸ் என்ற இரட்டைக் குழந்தைகளுக்கு ஓநாய் பால் கொடுப்பதுபோல் உள்ள பொம்மை ரொம்ப அழகாக இருகிறது. நம் நாட்டில் நதியை நாம் அன்னை என்று வணங்குகிறோம். கங்கை, கோதாவரி, கிருஷ்ணா, காவேரி எல்லாவற்றையும் அன்னை என்கிறோம். ஆனால் ரோமானியர்கள் நதிகளை தந்தை என்று வணங்குகிறார்கள். டைபர் நதியின் பொம்மை

மிகவும் இருக்கும். அவரை பெரிய தந்தைபோல் செய்வார்கள். அவர் பக்கத்தில் ஓநாயும் இரண்டு குழந்தைகளும் இருக்கும்.

இந்த ரோமானியரைப்பற்றி மற்ற ஒரு முக்கிய விஷயம் உண்டு. அவர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே நாகரீகத்தில் சிறந்து வாழ்நதார்கள் என்று சொன்னேன் அல்லவா? அப்போதே அவர்கள் நம் தமிழ் நாட்டுக்கு வந்தார்கள். எப்படி வந்தார்கள் தெரியுமா? கப்பலேறிக் கடல் கடந்து வந்தார்கள். அவர்களைப்பற்றி நம் சங்ககால இலக்கியங்கள் கூறுகின்றன. அப்படி வந்தபோது அவர்கள் தமது நாட்டு நாணயங்களையும் இங்கு கொண்டு வந்தார்கள். அந்த நாணயங்கள் சுமார் இராண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய நாணயங்கள். அவை நம் நாட்டில் கிடைத்திருக்கின்றன. இந்த நாணயங்களை எல்லாம் சென்னை பொருட்காட்சிச் சாலைக்கு போனால் இன்றும் பார்கலாம். அவர்களது மண் பாண்டங்கள் கூட நம் நாட்டில் கிடைத்திருக்கின்றன. பாண்டிச்சேரியில் இவை கிடைத்தன. இதிலிருந்து பாண்டிச்சேரியில் ரோமானியர் இருந்தார்கள் என்று தெரிகிறதல்லவா ?

# சிந்து நதிப் பண்பாட்டில்

சுமார் நாற்பது வருடத்திற்கு முன்னால் ஒரு பெரியவர் சிந்து நதிக் கரையோரமாக நடந்துகொண்டிருந்தார். அங்கே ஏதோ ஒரு பொருள் கிடைத்தது. கையில் எடுத்துப் பார்த்தார். அது சாதுரனமான ஒரு முத்திரை. அதில் அழகான மிருகம் ஒன்றும், பொம்மை பொம்மையான எழுத்துகளுமிருந்தன. அந்த எழுத்தை வாசிக்க முடியவில்லை. அந்த முத்திரையைப் பார்த்து ரொம்ப ஆச்சரியப்பட்டார். அந்த முத்திரை கிடைத்த இடம் மேடாக இருந்தது. அந்தக் குறித்துக் கொண்டார். அது கிடைத்த ஊருக்கு ஹரப்பா என்று பெயர். ஒரு வருஷம் கழித்து சில புதைபொருள் ஆராய்ச்சியாளர்களோடு அங்கு வந்தார். அந்த மேட்டை மெதுவாகத் தோண்டி பார்த்தார். அங்கு பூமிக்கடியில் பல வீடுகளும், மக்கள் உபயோகித்த மண்பாண்டங்களும் கிடைத்தன.

அதேபோல சிந்து நதிகரையிலே உள்ள இன்னும் ஒரு ஊர், அதற்கு மொஹஞ்சதாரோ என்று பெயர். அந்த ஊரிலும் தோண்டி பார்த்தார். அங்கேயும் ஹரப்பா மாதிரியே பூமிக்கடியில் வீடுகள் எல்லாம் காணப்பட்டன. இதேபோல் சிந்து நதிகரையில் பல ஊர்களிலும்

கிடைத்தன. அதிலிருந்து அந்த இடங்களில் எல்லாம் சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் மக்கள் வாழ்ந்திருக்க வேண்டும் என்று தெரிய வந்தது.

சிந்து நதிகரையில் வாழ்ந்தவர்கள் சிறந்த பண்பாடுயவர்களாய் வாழந்தார்கள். அவர்களது பண்பாட்டைச் “சிந்து நதிப் பண்பாடு” என்று சரித்ததிர ஆசிரியர்கள் சொல்வார்கள். புதைபொருள் ஆராய்ச்சியாளர்களிடம் ஒரு வழக்கம் உண்டு. முதன்முதலில் எந்த ஊரில், ஒரு புது நாகரிகத்தை கண்டுபிடிக்கிறார்களோ, அதற்கு அந்த ஊர்ப் பெயரையே வைப்பார்கள். இங்கு முதன்முதலில் ஒரு முத்திரை கிடைத்தது என்று பார்த்தோமல்லவா? அதனால் இதை “ஹாரப்பா பண்பாடு” என்று சொல்லுவார்கள்.

இந்தியாவிலேயே மிகப் பழமையன மக்கள் இந்த சிந்து நதிப் பண்பாட்டு மக்கள்தான். இதற்கு முன்பே நம் நாட்டில் பழைய கற்கால மனிதர்களும், புதிய கற்கால மனிதர்களும் வாழ்ந்தார்கள். கற்கால மக்களுடைய சரித்திரம் நமக்குத் தெரியாது. ஆனால் சிந்து நதி மக்கள் எவ்விதம் வாழ்ந்தார்கள். அவர்களுடைய குழந்தைகள் என்ன என்ன பொம்மைகளை வைத்துக்கொண்டு விளையாடினார்கள் என்று நமக்குத் தெரியும். குரங்கு பொம்மை, நாய் பொம்மை, காண்டமிருகம் பொம்மை போன்ற பல பொம்மைகள் அங்கு

கிடைத்துள்ளன. அவைகளைப் பற்றிச் சொல்வதற்கு முன்னால் அங்கு வாழ்ந்த மக்களைப் பற்றித் தெரிந்துகொள்வோம்.

மொஹஞ்சதாரோ, ஹாரப்பா என்ற இடங்களில் பல வீடுகள் கொண்ட நகரங்களே இருக்கின்றன. இப்பொழுது புதிது புதிதாக வீடுகள் கட்டுகிறார்களே, அங்கு போய்ப் பார்த்திருக்கிறீர்களே? அங்கு தெருக்கள் எல்லாம் நேராயிருக்கும். வீடுகள் எல்லாம் ஒரே சீராக இருக்கும். நல்ல திட்டமிட்டுக் கட்டப்பட்டு வரிசையாக இருக்கும். ஆனால் பழைய வீடுகள் இருக்கின்ற தெருக்களைப் பாருங்கள். இவைகள் வளைந்து வளைந்து இருக்கும். நேராக இருக்காது. ஹாரப்பா பண்பாட்டு நகரங்களில் தெருக்கள் பூராகவும் நேராகவும், சீராகவும் இருக்கும். ஒவ்வொரு வீட்டிலும் குளிக்க தனியறை இருக்கிறது. சாப்பிடுவதற்குத் தனயறை இருக்கிறது. ஒவ்வொரு வீட்டிலும் சாக்கடைகளும் உண்டு. ஒவ்வொரு தெருவிலும் வீடுகளிலிருந்து வெளிவரும் கழிவுநீரை எடுத்துச் செல்ல பெரிய சாக்கடைகள் இருந்தன. ஆனால் அவைகள் மேலே தெரியாமல் மூடப்பட்டிருக்கும். இதனால் புழு, பூச்சிகள் வரமாட்டா.

இதிலிருந்து இங்கு வாழந்த மக்கள் சுகாதாரம் தெரிந்தவர்கள்; ஆரோக்கியமான வாழ்க்கை நடத்தினார்கள் என்றும் தெரிகிறதல்லவா? நன்றாக திட்டமிட்டு வீடுகள் கட்டுவதில் சிறந்தவர்கள் என்றும் தெரிகிறதல்லவா?

இவ்வளவு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இந்திய மக்கள் சிறந்த பண்பாடு உடையவர்களாக வாழ்ந்தார்கள் என்று உலகமே ஆச்சரியபடுகின்றது. நம் முன்னோர்கள் இவ்வளவு சிறந்தவர்கள் என்று தெரிந்து கொள்ள நமக்கு பெருமையாக இருக்கிறது அல்லவா?

இவ்வளவு அழகாகவும் திட்டமிட்டும் கட்டிய நகரங்களை எதிரிகள் அழித்துவிடாமல் இருக்க, நகரத்தைச் சுற்றிலும் உயர்ந்த கோட்டை மதில்களை எழுப்பியிருக்கிறார்கள். இவர்கள் வீடுகட்ட உபயோகித்த செங்கற்கள் எல்லாம் மிகப் பெரியவை. குளிக்கவும், நீச்சலடிக்கவும் குளங்கள்கூட இவர்கள் கட்டியிருக்கிறார்கள.

உங்களுக்கு ஒரு உண்மை தெரியுமா? உலகத்திலேயே முதன்முதலில் தசம முறையைக் கண்டுபிடித்தது நம் இந்திய நாடுதான். தசம முறை என்றால் என்ன தெரியுமல்லவா? எல்லாம் பத்தின் பாகம் என்று அர்த்தம். ஒரு ரூபாய்க்கு நூறு பைசா; அரை ரூபாய்க்கு ஐம்பது பைசா; கால் ரூபாய்க்கு இருபத்தைந்து பைசா — இந்த கணக்கு அணா கணக்கைவிடப் போடுவதற்கு ரொம்ப சுலபமல்லவா? இதேபோல எடைகளிலும் நீளம், உயரம் போன்ற நீட்டலவைகளிலும், தசாம்ச முறை மிகவும் சுலபமானது. இந்த முறையை நம்நாட்டில் சிந்து பண்பாட்டு மக்கள் உபயோகித்து வந்தார்கள். அங்கு பல எடைகள் கிடைத்துள்ளன. அவற்றில் பொதுவாக இரண்டு வகைகள் உள்ளன. ஒருவகை, பத்தின் மடங்கான தசாம்ச வகை; மற்றது 1, 2, 4,8 என்ற

இரண்டு மடங்குகளாலான முறை. தசாம்ச முறை மிகவும் பழமையானது, சுலபமானது என்ற காரணத்தினால்தான் நம் இந்திய அரசாங்கம் நாணயங்கள், நீட்டலளவை, நிறுத்தல் அளவை, முகத்தல் அளவை முதலிய எல்லாவற்றையும் இப்போது தசாம்ச முறைக்கு மாற்றிவிட்டார்கள்.

இனி சிந்துநதிக் குழந்தைகள் என்ன பொம்மைகளை உபோகித்தார்கள் என்று தெரிந்துகொள்வோம். கல், களிமண், பீங்கான் முதலியவற்றாலான பொம்மைகளை இவர்கள் உபயோகித்தார்கள். இந்த பொம்மைகள் எல்லாம் இப்போது கடைத்திருக்கின்றன. மனிதரைப் போன்ற சிறிய பொம்மைகள் ஒருவகைப் பளிங்குக் கல்லினால் செய்யப்பட்டிருக்கின்றன. பூமிக்கடியிலிருந்து கிடைத்திருப்பதினால் இவைகள் உடைந்து போயிருக்கின்றன. இருந்தாலும், இவை மிகவும் அழகாக உள்ளன. இவ்வளவு அழகான இந்தப் பொம்மைகளைச் சிறந்த வேலைப்படுடையவர்கள்தான் செய்திருக்க முடியும். பச்சை களிமண்ணினால் பொம்மைகளைச் செய்து அதை உலர்த்திவிடவேண்டும் பிறகு நெருப்பில் போட்டுச் சுட்டால் அவை சீக்கிரம் உடையாமல் கெட்டியாய் இருக்கும். இப்போது நவராத்திரிக்கு நாம் வாங்கும் மண் பொம்மைகள் எல்லாம் அப்படிதான் செய்யப்பட்டவை. அதேபோல செய்யபட்ட பல பொம்மைகள் சிந்து நதி நகரங்களில் கிடைத்தன. அவற்றில் அப்பம்

விற்கும் பெண், குழந்தைக்கு பால் ஊட்டும் தாயார், தொப்பி போட்ட ஆள் — இவர்களின் பொம்மைகள் இருக்கின்றன. இதேபோல களிமண்ணால் செய்த ஊதல்கள் கூடக் கிடைத்திருக்கின்றன. இந்த ஊதல்கள் குருவிபோலப் பறைவை பொம்மையாக இருக்கின்றன. அதன் வால் பக்கத்தில் துளைப்போட்டு ஊதுவதற்கு வழிசெய்து இருக்கிறது. சிறிய மாட்டு வண்டிகளின் பொம்மைகளும் அதில் பூட்டிய மாட்டின் பொம்மைகளும்கூட அதிகமாக கிடைத்தன. ஆனால் அதன் சக்கரங்களில் இப்போது இருக்கிற மாதிரி குறுக்குச் சட்டங்கள் கிடையாது; சக்கரம் பூராவும் ஒரே பாகத்தால் செய்த மாதரியிருக்கிறது.

சிந்துநதி மக்கள் மண் பொம்மைகளைப் போலவே உலோகத்தாலும் பொம்மைகள் செய்தார்கள். உலோகங்களில் தாமிரம் அதிகமாக உபயோகப் படுத்தபட்டது. குழந்தைகளுக்கு மிருகங்களுடைய பொம்மைகள் என்றால் எப்பவுமே ரொம்ப பிடிக்கும். இப்போதுகூட நாய், குரங்கு, சிங்கம் போன்ற பொம்மைகள் உங்களுக்கு ரொம்ப பிடிக்குமல்லவா? அதேபோல சிந்துநதிக் கரையில் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வாழ்ந்திருந்த குழந்தைகளுக்கும் மிருகங்களின் பொம்மைகள்தான் ரொம்ப பிடிக்கும். அதனால்தான் அவர்களுடைய பொம்மைகளில் செம்மறியாட்டுப் பொம்மையும், ஒரு எருமை “ஹொய்ங்” என்று கட்டிக்கொண்டு தலையை ஆட்டுவதுபோலப் பொம்மைகளும் கிடைத்திருக்கின்றன. ஒரு

நாட்டியமாடும் பெண்ணின் அழகான சின்ன பொம்மையும் கிடைத்திருக்கிறது. இவைகள் உலகத்திலேயே மிகவும் அழகுள்ள பொம்மைகள். இவைகளை பார்ப்பதற்கு அமெரிக்கா, இங்லாந்து, பிரான்சு, ஜெர்மனி, ஜப்பான் போன்ற வெளிநாடுகளிலிருந்தெல்லாம் மக்கள் இன்னும் வந்து பார்த்து மிகவும் ஆச்சரியபடுகிறார்கள். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இவ்வளவு அழகான பொம்மைகளைச் செய்து இருக்கிறார்களே என்பதின் இவர்கள் ஆச்சரியபடுவதற்கான காரணம்.

இந்தச் சிந்துநதிப் பண்பாட்டில் மற்றொரு முக்கிய விஷயம் உண்டு. முதன் முதலில் இங்கு முத்திரையொன்று ஹாரப்பாவில் கிடைத்தது என்று பார்த்தோம் அல்லவா? அதேபோல ஆயிரத்திற்கும் மேற்பட்ட முத்திரைகள் இதுவரையிலும் கிடைத்திருக்கின்றன. இவைகள் சிறிய சதுர வடிவத்திலும், நீண்ட சதுரவடிவத்திலும் உள்ளன. ஒரு பக்கத்தில் சின்ன மிருகங்களும், பொம்மை வடிவமான எழுத்துக்களும் இருக்கின்றன. இந்த எழுத்துக்கள் என்ன சொல்கின்றன என்று இதுவரையிலும் யாராலும் சொல்ல முடியவில்லை. ஆனால் இதிலிருக்கும் பொம்மை, மிருகங்கள் எல்லாம் ரொம்ப அழகாக உள்ளன. சிறியதாயுள்ள மிருகங்களதான் சிந்துநதி முத்திரையில் இருக்கின்றன. ஆயினும் அவை மிகவும் அழகு வாய்ந்தவை. இவற்றில் காண்டா மிருகம், யானை, புலி, மாடு முதலியவை காணப்படுகின்றன. ஆனாலும் அதிகமான முத்திரைகளில் ஒரு

அதிசய மிருகம் காணப்படுகிறது. அதற்கு ஒரே ஒரு கொம்பு தலையில் இருக்கும். காலைப் பார்த்தால் மாடு மாதிரி இருக்கும். இது என்ன மிருகம் என்று தெரியவில்லை. இதை “ஒத்தைக் கொம்பு மிருகம்” என்று சொல்கிறார்கள். இதேபோல இன்னும் சில அதிசய மிருகங்களெல்லாம்கூட உள்ளன. இதுபோல இன்னும் பல விஷயங்களைச் சிந்துநதிப் பண்பாட்டு மக்களிடமிருந்து அறிந்து கொள்ளாம்.

# மௌரியப் பண்பாட்டில்

இந்தியாவில் மௌரிய சாம்ராஜயத்தை இன்றைக்கு சுமார் 2300 ஆண்டுகளுக்கு முன்னால் ஏற்படுத்தியவர் சந்திரகுப்த மௌரியர். அவருக்குப் பின்னால் வந்த அசோகச் சக்ரவார்த்தியைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அவர் மிகச் சிறந்த வீரர். கலிங்கத்தில் ஒரு சண்டை செய்தார். அதில் அவர் வெற்றியடைந்தார். இருந்தபோதிலும் ஆயிரக்கணக்கான வீரர்கள் இறந்து போனார்கள். அதைப் பார்த்த அசோகர் வருத்தப்பட்டார். இனிமேல் சண்டை செய்வதில்லை என்று பிரதிக்ஞை பூண்டார். புத்தர் சொன்ன வழியை பின்பற்றினார். அவர் காலத்தில் பொம்மைகள் எப்படி இருந்தன என்று பார்ப்போம்.

அசோகர் புத்தர் வழியைப் பின்பற்றினார் அல்லவா? அதனால் அநேக பௌத்த ஸ்தூபங்களை எழுப்பினார். பௌத்த ஸ்தூபங்கள் என்றால் என்ன தெரியுமா? புத்தர் இறந்த பிறகு அவருடைய புனித எலும்புகளை ஸ்படிகக் குவளைக்குள் வைத்து அதன் மேல் பந்துபோல் ஒரு கட்டிடம் எழுப்புவார்கள் அதற்கு ஸ்தூபம் என்று பெயர். அதன் முன் விளக்கேற்றி ஜனங்கள் வணங்கினார்கள். இந்த

மாதிரி புத்தரின் சீடர்கள் இறந்த இடத்திலும் கட்டிடம் எழுப்பினார்கள். இதற்கும் ஸ்தூபங்கள் என்று பெயர். அசோகர் புத்தருக்கு பல ஸ்தூபங்கள் கட்டினார். அதோடு அவர் வேறு ஒரு வழியிலும் புத்தர் வழியைப் பரப்பினார். உயரமாகக் கல்தூண்களை நட்டு அதில் புத்தரின் வழியை எழுதி வைத்தார். இந்த கல்தூண்களைப் பளபளவென்று தேய்த்துப் பார்த்தால் கண்ணாடி மாதிரி இருக்கும்படி செய்தனர். அதனமேல்தான் எழுதினார்கள். இந்தத் தூணின் உச்சியில் அழகான மிருகங்களின் பொம்மைகளைச் செதுக்கினர். ஒரு தூணில் யானை, இன்னொரு தூணில் மாடு, இன்னொரு தூணில் சிங்கம் முதலிய பொம்மைகள் இருந்தன. ஒரு தூணில் நான்கு சிங்கங்கள் நான்கு திசைகளையும் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தன. அதன்மேல் ஒரு சக்கரம் இருந்தது. அந்தச் சக்கரம் விழுந்துவிட்டது. இததான் இப்போது இந்திய அரசாங்கச் சின்னமாக உள்ளது. காசுகளிலும், ஸ்டாம்புகளிலும் காணப்படுகிறது.

இது மாதரியான தூண்களையும் மற்ற பொம்மைகளையும் அசோகர் இந்திய சிற்பிகளைக் கொண்டு செய்வித்தார் அவருடைய ராஜ்யம் வடமேற்கே பாரசீகம்வரை பரவியிருந்தது. பாரசீக தேசத்துச் சிற்பிகளையும் கொண்டு இதுபோன்ற தூண்களை அசோகர் செதுக்கினார். அதனால் அசோகரது கலையில் இரண்டு தேசக் கலைகளையும் காணலாம்.

அசோகருக்கு பிறகு வட இந்தியாவை “சுங்கர்கள்” என்ற அரசர்களும், தக்காணத்தை “சாத்தவாஹனர்கள்” என்ற அரசர்களும் ஆண்டார்கள். அவர்கள் அசோகர் கட்டுவித்த ஸ்தூபங்களை அழகிய சிற்பங்களைக் கொண்டு அலங்கரித்தார்கள். இந்த சிற்பங்கள் எல்லாம், பார்குத், சாஞ்சி, அமராவதி, நாகார்ஜுனகொண்டா முதலிய இடங்களில் கிடைத்தன. இதே காலத்தில் பம்பாய் நகருக்கருகில் கார்லே, பாஜா, அஜந்தா முதலிய இடங்களில் மலைகளைக் குடைந்து பௌத்த கோயில்கள் செய்தார்கள். இவைகளுக்குச் சைத்யஙகள் என்று பெயர். இதற்கு பின்னால் வந்த அரசர்களும் இதுபோன்ற குகைகளைக் குடைந்திருக்கிறார்கள். சிற்பங்களைச் செதுக்கியிருக்கிறார்கள். ஓவியங்களைத் தீட்டியிருக்கிறார்கள.

# காந்தாரப் பண்பாட்டில்

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் கிரேக்க நாட்டை ஒரு வீரன் ஆண்டான். அவனுக்கு உலகம் முழுவதையும் பிடிக்கவேண்டும் என்ற ஆசை. இந்தியா மிகவும் நல்ல நாடு. அதைப் பிடிக்க வேண்டுமென்று படையெடுத்து வந்தான். அவன் பெயர் என்ன தெரியுமா? அவன்தான் அலெக்ஸாண்டர். அலெக்ஸாண்டர் சிந்துநதி வரை வந்தான். அவன் நாட்டை விட்டு வெகு தூரம் வந்த அவனது படைகள் மேலே செல்ல மறுத்துவிட்டன. அதனால் அலெக்ஸாண்டர் தன் தாய்நாடு திரும்பினான். போகும் வழியிலேயே இறந்துவிட்டான். அவன் வந்த வழியான வடமேற்கு இந்தியாப்பகுதியில் அவனுடன் வந்த சில சேனைத் தலைவர்கள் தங்கினார்கள். அவர்களே அந்த பகுதியை ஆண்டனர். அந்த பகுதியை இந்தியாவின் பழைய கால இலக்கியங்கள் “காந்தார தேசம்” என்று சொல்லும். இந்த காந்தார தேசத்தை முதலில் கிரேக்கத் தலைவர்களும், அவர்களக்குப் பின்னர் சகர், குஷானர் என்பவர்களும் ஆண்டு வந்தனர். அதனால் அதை “இந்திய கிரேக்க பண்பாடு” என்று கூறுவர். அதையே “காந்தாரப் பண்பாடு” என்றும்

சொல்வதுண்டு. இந்த காந்தாரப் பண்பாட்டில் எவ்விதம் பொம்மைகள் இருந்தன என்பதைப் பற்றித் தெரிந்து கொள்வோம்.

இங்கு தங்கியவர்கள் கிரேக்கர்கள் ஆனபோதிலும் இவர்கள் பௌத்த மதத்தைத் தழுவினார்கள். அதனால் இங்கு பௌத்த ஸ்தூபங்கள் எழுந்தன. இவ்விடத்தை ஆராய்ச்சியாளர் பரிசோதித்தனர். தக்ஷசீலம் என்ற இடத்தில் மிகச் சிறந்த ஒரு பௌத்த ஸ்தூபம் இருந்தது. அங்கு பல பொம்மைகள் கிடைத்துள்ளன. அவைகளின் சில மண்ணாலும், சில கல்லாலும், சில உலோகங்களாலும் ஆனவை. குழந்தைகள் வைத்துக்கொண்டு விளையாடக்கூடிய சில மண் சின்னங்கள் இங்கு கிடைத்துள்ளன. இன்றுகூட திருவிழாக் காலங்களில் மண்ணினால் ஆன சில விளையாட்டுப் பாத்திரங்களை பார்க்கிறோம். எழுதுவதற்கு மைக்கூடுகள் நாம் வைத்துக்கொண்டு இருக்கிறோம். அவைகள் பல உருவங்களில் கண்ணாடியில் செய்யப்பட்டு விளங்குகின்றன. ஆனால் அக்காலத்தில் மண்ணினாலேயே மைக்கூடுகள் செய்து உபயோகப்படுத்தினார்கள். அவை எப்படி இருந்தன தெரியுமா? பறவை உருவிலே இருந்தன. அவைகளைக் களிமண்ணால் செய்து பின்னர் நெருப்பில் இட்டுச் சுட்டுவிடுவார்கள். அதனால் அவற்றில் மை ஊற்றினால் உலர்ந்து போகாது. அதேபோல உலோகங்களினாலும் ஆன மைக்கூடுகளும் காந்தாரப் பண்பாட்டில் இருந்தன.

இங்கு இன்னும் ஒரு அதிசியமான மண் பாண்டம் கிடைத்துள்ளது. இன்று நாம் நீராவியை இறக்கும் கண்ணாடிக் குவளைகளை விஞ்ஞான வகுப்புகளில் பார்க்கிறோமல்லவா? அதேபோல அந்த மண்பாண்டம் இருக்கிறது. நீண்ட வளைந்த குழாய்போன்ற வாயை உடையதாக ஒரு பாத்திரம் இருக்கிறது. மற்றொரு பாத்திரம் அக்குழாய்க்குள் நுழைவதாக இருக்கிறது. வளைந்த குழாயை உடைய பாத்திரத்தில் தண்ணீரை ஊற்றிக் காய்ச்சினால் அதிலிருந்து உண்டாகும் நீராவி மற்ற பாத்திரத்துக்குச் சென்று குளிர்ந்து நீராக மாறுகிறது. இதிலிருந்து அக்காலத்திலேயே நீராவி இறக்கும் முறை தெரிந்திருந்தது என்று கொள்லாம் அல்லவா? இரண்டு, மூன்று அல்லது நான்கு மூக்குகளையுடைய மண்பாத்திரங்களும், கிரேக்க, ரோமானிய நாடுகளில் உபயோகித்திலிருந்து வந்தன.

மண்ணினாலான மற்றைய பொம்மைகளில் விளக்குகள் நன்றாக இருக்கின்றன. முன்பே ரோமானிய பண்பாட்டில் இருந்த பொம்மைகளைப்பற்றித் தெரிந்து கொணடோம். அப்போது ரோமானியர் அழகான விளக்குகள் செய்வதில் சிறந்தவர்கள் என்று பார்த்தோம். காந்தார நாட்டில் இருந்தவர்கள் கிரேக்க, ரோமானியக் கலைஞர்களை வரவேற்று அவர்களைக் கொண்டு தங்கள் பொம்மைகளைச் செய்தார்கள். அதனால் அவர்களது பொம்மைகள் கிரேக்க நாட்டு பொம்மைகள் போலவும், ரோமானிய நாட்டு பொம்மைகளைப் போலவும் இருக்கின்றன. ஆமை உருவத்தில்

அழகான விளக்குக் கிடைத்துள்ளது. ஒரு பொம்மை நின்றுகொண்டிருக்கிறது. அதன் கையில் ஒரு விளக்கு இருக்கிறது. இதுபோன்ற விளக்குகளுக்கு "பாவை விளக்குகள்" என்று நம் நாட்டில் பெயர். இந்த விளக்குகளும் அதிகம் அங்கு கிடைத்துள்ளன.

அத்துடன் குளிக்கும்போது உடலைத் தேய்த்துக்கொள்ள அக்காலத்தில் சோப்புகள் கிடையாது. அதனால் களிமண்ணால் சோப்புக்களைப்போல் கட்டிகள் செய்து அதைக்கொண்டு உடலைத் தேய்த்துக் கொண்டார்கள். அதுபோன்ற பல கட்டிகள் கிடைத்துள்ளன. சின்னச் சின்ன களிமண் பொம்மைகள் குழந்தைகள் விளையாடுவதற்காகச் செய்யப்பட்டன. பல பொம்மைகள் இவ்விடத்தைத் தோண்டிப் பார்த்தபோது கிடைத்துள்ளன. நடன பொம்மை, நிற்கிற பொம்மை, உட்கார்ந்திருக்கிற பொம்மை எல்லாம் கிடைத்திருக்கின்றன.

இந்தப் பொம்மைகளில் சில முக்கியமானவை. குதிரையைப்போல ஒரு பொம்மை. அது பாய்ந்து ஓடுவது போலச் செய்யப்பட்டு இருக்கிறது. முன்கால் இரண்டின் வழியாகத் துளைபோட்டு ஒரு குச்சியைச் செலுத்தியுள்ளனர். அதன் இரண்டு பக்கத்திலும் இரண்டு சின்ன சக்கரம் வைக்கப்பட்டு இருக்கிறது. அதேபோல பின் கால்களிலும் இரண்டு சக்கரம். அதாவது நான்கு சக்கரங்கள் இருக்கின்றன. மூக்கில் ஒரு துளைபோட்டிருக்கிறது. அதில் சின்ன

நூல் கயிற்றைக்கட்டி இழுப்பதுபோல் செய்திருக்கிறார்களள. நாம் இப்போது பொம்மைத் தேரைக் கயிறுகட்டி இழுக்கிறோமல்லவா? அதேபோல இந்த குதரைப் பொம்மையையும் தரதரவென்று இழுக்கலாம். இதேபோல பல மிருகங்கள் சக்கரம் போட்டுக் கிடைத்துள்ளன. மாடு, யானை, நாய் முதலிய சக்கரம் போட்ட மிருகங்கள் உள்ளன. வாத்து, புறா, காக்கை முதலியவற்றின் பொம்மைகளும் இருக்கின்றன. அனால் அவற்றில் இரண்டு சக்கரங்கள்தான் இருக்கின்றன. இது தவிர, சக்கரம் போடாத ஒட்டகம், மாடு முதலிய பொம்மைகளும் இருந்தன. சின்னச் சின்ன பொம்மை வீடுகளும் கிடைத்துள்ளன.

களிமண்ணால் ஆன பொம்மைகள் போலவே பாசி, மணி போன்ற மணிகளினால் ஆன மிருகங்களும் கிடைத்துள்ளன. இந்த மிருகங்கள் எதற்க்காச் செய்யப்பட்டவை தெரியுமா? இப்போதும் நம் பெண் குழந்தைகள் தங்கள் கழுத்தில் போட்டுக்கொள்ளும் சங்கிலிகளில் டாலர்களைத் தொங்கவிட்டுக் கொள்கிறார்கள் அல்லவா? அதே போல தந்தம், பிளாஸ்டிக் முதலியவற்றால் ஆன சிங்கம், புலி, குதிரை போன்ற மிருகங்களையும் தொங்கவிட்டுக்கொள்கிறார்கள் அல்லவா? அக்காலத்திய குழந்தைகளும் தங்களது கழுத்துச் சங்கிலிகளில் பொம்மைகளைத் தொங்கவிட்டுக் கொண்டனர். இவ்விதம் தொங்கவிட்டுக் கொள்ள சிங்கம், தவளை, யானை, ஆமை, ஆடு, குரங்கு, தேள் முதலியவைகள் செய்யப்பட்டன.

உலோகத்தினால் ஆன பொம்மைகள் கிடைத்துள்ளன. ஒரு சிங்கத்தின் பொம்மை ஒன்று கிடைத்துள்ளது. அது சின்னப் பொம்மையான போதிலும் மிகவும் அழகாக இருக்கிறது. பின்னங்கால்களை ஊன்றி முன்னால் பாய்ந்து "ஆ" என்று வாயைத் திறந்து கொண்டு இருப்பதைப் பார்த்தால் அந்தப் பொம்மை நமக்கு கிடைக்காதா, அதை வைத்துக் கொண்டு விளையாடமாட்டோமா என்று எண்ணத் தோன்றும். ஒரு ஒட்டகத்தின் பொம்மை உட்கார்ந்திருப்பதுபோல் இருக்கிறது. இதபோல் இன்னும் எவ்வளவோ பொம்மைகள். நம் வீட்டில் கொலுவில் வைப்போமே மரப்பாச்சி பொம்மை; பின்னால் பின்னலை தொங்கவிட்டுக் கொண்டு இரண்டு கைகளையும் உடம்போடு ஒட்டினால்போல் வைத்துக் கொண்டு அட்டென்ஷனில் நிற்பது போல் உள்ள ஒரு பொம்மை. அதேபோல கல்லினால் ஆன பொம்மையும் இருக்கிறது. எகிப்து நாட்டிலும், கிரேக்க நாட்டிலும் இருந்த குழந்தைகள் போன்ற பொம்மைகளும் கிடைத்திருக்கின்றன. கிலுகிலுப்பைகளும், ஊதல்களும் கிடைத்துள்ளன.

காந்தார நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்கள் கிரேக்கர்களும் அவர்களுக்குப் பின்னால் வந்த சகர்களும் என்று சொன்னேன் அல்லவா? அதனால்தான் காந்தாரப் பண்பாட்டில் கிடைத்துள்ள பொம்மைகள் கிரேக்க, ரோமானியர்களால்

செய்யப்பட்டவை. அந்த நாட்டில் இருந்த பொம்மைகளைப் போலவே இங்கும் கிடைத்துள்ளன.

இதுபோன்று பல நாட்டின் பண்பாடுகளையும் அவர்களது பொம்மைகள் மூலமாகவே நாம் தெரிந்து கொள்ளலாம்.

# தமிழர் பண்பாட்டில்

உருட்டு சட்டி பொம்மையிது
உருண்டு உருண்டு ஆடுமிது
தஞ்சாவூர் ரயிலிடியில்
தம்பி பாப்பா அழுதபோது
சின்ன அத்தான் வாங்கி தந்த
சீரான பொம்மையிது

என்று நம் தமிழ் நாட்டில் குழந்தைகள் அனைவருக்கும் ஒரு பாட்டுத் தெரியும். ஏன் நம் தமிழ் நாட்டில்தான் பொம்மைக்கென்று ஒரு தனி விழாவே கொண்டாடுகிறோமே! இதுபோல் வேறு எங்கேயும் கிடையாது. ஒன்பது நாள் பொம்மைகளை அழகு அழகாகப் படிப்படியாக வைத்து அவைகளை அலங்கரித்து மகிழகிறோம். இவற்றிற்கு நவராத்திரி விழா என்று பெயர். தொட்டி கட்டி அதில் தண்ணீர் விட்டு மீன், நண்டு பொம்மைகளை எல்லாம் போட்டு விளையாடுவோம். சிறுமியர்கள் விசேஷமாக தினந்தினம் ஒரு வேஷம் போட்டுக் கொண்டு மற்றவர்களை அழைத்து வந்து தம் வீட்டுப் பொம்மைகளைக் காண்பிப்பார்கள். கடைசி நாளன்று

கலைமளான சரஸ்வதியைப் பூஜித்போம். எவ்வளவு உற்சாகமான விழா. இது தமிழ் நாட்டுக்கே தனிப்பெருமை தரும் விழா.

பழங்காலத் தமிழ் இலக்கியங்களைச் சங்க இலக்கியங்கள் என்று சொல்லுவோம். பல புலவர்கள் சங்கமாகக் கூடி தங்கள் பாட்டுக்களை அரங்கேற்றியதால் சங்க இலக்கியங்கள் என்று பெயர் பெற்றன. இவை இன்றைக்கு சுமார் 2000 வருஷங்களுக்கு முந்தியவை. இந்தக் காலத்தைச் சார்நதவர்கள்தான் ஔவையார், திருவள்ளுவர் முதலிய பெரியவர்கள். அந்த சங்க இலக்கியங்களில் ஒரு நிகழச்சி வருகிறது. ஒரு தச்சன் தன் குழந்தைகளுக்கு நல்ல தேர் பொம்மை ஒன்று செய்து கொடுத்தானாம். அது மிகவும் நேர்த்தியாக செய்யப்பட்ட பொம்மை. அதை இழுத்துக் கொண்டு அந்த தச்சச் சிறுவன் வேகமாக ஓடினானாம். எவ்வளவு வேகமாக ஓடினாலும் அந்தத் தேர் கீழே விழாமல் உருண்டு ஓடிக்கொண்டே இருந்ததாம். இப்போது சில தேர் பொம்மைகளை வாங்கி இழுத்துப் பாருங்கள். கொஞ்ச தூரம் ஓடுவதற்குள் “தொப்” என்று விழுந்து விடும். பழங்காலத்தில் தமிழ் நாட்டில் அவ்வளவு சிறந்த பொம்மைகள் செய்யக்கூடிய திறைமைசாலிகள் இருந்தார்கள். இவர்கள் துணி, பசை, குச்சி முதலியவைகளை வைத்துக்கொண்டும் பொம்மை செய்வார்களாம்.

அக்காலத்தில் ஒரு நாட்டிலிருந்து பக்கத்து நாட்டு மீது படையெடுப்பார்கள். சில சமயம், மாடு, ஆடுகள் இவைகளை

தூக்கொண்டு ஓடி விடுவார்கள். அப்போது அந்த ஊரில் உள்ளவர்கள் சப்தம் செய்வார்கள். “எங்கள் ஊரை எதிரிகளிடமிருந்து காப்பாற்றுகிறோம்” என்று சொல்லுவார்கள். சண்டை வந்தால் வீரமாகப் போர் புரிவார்கள். சில சமயம் வெற்றி பெருவார்கள். சில சமயம் போரில் வீர மரணம் அடைவார்கள். அப்போது அவர்களுடைய உருவத்தை கல்லில் பொம்மையாகச் செதுக்கி, அதை நட்டுவைத்து அவ்வூர் மக்கள் பூஜிப்பார்கள். இதற்கு “வீரக்கல்” என்று பெயர். ஒரு சமயம் ஒரு புலி ஊருக்குள் புகுந்து தொந்தரவு செய்தது. அப்போது ஒரு வீரன் அப்புலியுடன் சண்டை போட்டு அதைக் கொன்றான். அவனுக்கும் வீரக்கல் எடுத்திருக்கிறார்கள். இது போன்று வீரர்களுக்குக் கல் நடும் பழக்கம் நம் நாட்டில் இருந்தது என்று சங்க இலக்கியங்களிலிருந்து அறிகிறோம். பல வீரக்கற்கள் கிடைத்திருக்கின்றன.

இன்னும் தமிழ் நாட்டில் அதிகமாக தோண்டிப் பார்க்கவில்லை. அதனால் அந்தகாலத்து பொம்மைகள் எப்படி இருந்தன அன்று தெரியவில்லை. சுமார் 1300 வருஷங்களுக்கு முன்னர் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு பல்லவர் என்ற மன்னர்கள் ஆண்டார்கள். அவர்கள் மலைகளை எல்லாம் குடைந்து குகைக் கோயில்கள் செய்திருக்கிறார்கள். அது மட்டுமா! மலைகளைக் கோயில்களாகச் செதுக்கியிருக்கிறார்களை. இங்கு பெரிய பாறை ஒன்றில் அழகிய சிற்பங்கள் செதுக்கியிருக்கிறார்கள். இது அர்ஜுன தவம் என்ற

கதையைக் குறிக்கும். இங்கு பல மிருகங்களின் பொம்மைகள் இருக்கின்றன. பெரிய யானைகள் ஓடுவது போலவும் இருக்கின்றன. அதன் காலடியில் யானைக் குட்டிகள் விளையாடுவது ரொம்ப அழகாக இருக்கிறது.

அதற்குப் பக்கத்தில் ஒரு பூனை. திருட்டுப் பூனை. அதற்கு ஓடி எலிகளைப் பிடிக்க முடியவில்லை. அதனால் ஒரு தந்திரம் செய்தது. தபஸ் செய்ய ஆரம்பித்தது. முதலில் எலிகள் எல்லாம் அதன் பக்கத்தில் செல்ல பயப்பட்டன. பின்னால் அது ஒரு எலியையும் கொல்லாதாது கண்டு எல்லா எலிகளும் அதன் காலடியில் விளையாடின. ஏமந்த சமயம் பார்த்து எலிகளைக் “கபக்கென்று” பிடிக்க பூனை பொய் தபஸ் செய்கிறது.

மான் ஒன்று படுத்துக் கொண்டு மூக்கைத் தடவிக் கொடுக்கிறது. குரங்குகள் விளையாடுகின்றன. சிங்கங்கள் நிற்கின்றன. பக்கத்தில் குரங்கு ஒன்று மடியில் குட்டியை வைத்து இருக்கிறது. அதற்கு மற்றொரு மந்திக்குரங்கு பேன் பார்க்கிறது. இது மிகவும் நல்ல சிற்பம். இது போன்று அழகிய சிற்பங்கள் எல்லாம் மாமல்லபுரத்தில் உள்ளன. பல்லவர்களுக்குப் பின்னால் வந்த சோழர்கள் கோயில்களில் கடவுளகளின் பல உருவங்கள் செய்து வைத்தார்கள்.

இது போன்று பலநாட்டுப் பழங்கால பொம்மைகளைப் பற்றி தெரிந்து கொள்ளும்போது அந்நாட்டு மக்களின் பண்பாட்டையும் தெரிந்து

கொள்ள முடிகிறது அல்லவா? இதுபோன்று எவ்வளவோ நாடுகள் இருக்கின்றன. எவ்வளவோ விதமான பொம்மைகள் இருக்கின்றன. அவற்றைப்பற்றி கொஞ்சம் கொஞ்சமாக தெரிந்து கொள்லாம்.

## FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில்

ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள்

சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது

பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்

3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும்  எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

**துவக்கம்**

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

**முடிவு**

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை http://kaniyam.com/foundation

# கணியம் அறக்கட்டளை




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

## தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

## கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி

- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

## அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்

- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்

- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**
**Account Number : 606 1010 100 502 79**
**Union Bank Of India**
**West Tambaram, Chennai**
**IFSC – UBIN0560618**
**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**

---




BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.